[23rd August 1960

*List of Backward Classes*

* 407 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பின்தங்கிய வகுப்பினர் ஜாபிதாவைத் திருத்தும் விஷயமாக மத்திய சர்க்கார், நமது ராஜ்ய சர்க்காருக்கு ஏதாவது தாக்கீது அனுப்பியுள்ளார்களா?

(ஆ) அதன் விவரமென்ன ?

(இ) இந்த ராஜ்ய சர்க்காரின் அபிப்பிராயமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : The attention of the hon. Member is invited to the answer to starred question No. 810 put by Sri P. G. Manickam.

*Spurious drugs*

* 404 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) சென்னை சர்க்காரால் அமைக்கப்பட்டிருக்கும் போலி மருந்து தடுப்புக் கமிட்டியாரால் எத்தனை போலி மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டன?

(ஆ) எத்தனை பேர்கள் மீது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The Anti-Spurious Drugs Committee is only an Advisory Committee. The Drugs Control Department detects and takes necessary action in cases of manufacture and sale of spurious drugs.

(b) Three cases were detected and the dealers were fined. Three more cases are under investigation.

SRI P. G. MANICKAM : போலி மருந்துகள் எவை எவை என்று பொது ஜனங்கள் உணர்ந்துகொள்ளும்படியாக சர்க்கார் விளம்பரம் செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்போதைக்கப்போது கண்காட்சி நடைபெறுகிறது. எது போலி மருந்து, எது நல்ல மருந்து என்பதை எல்லாம் நன்றாகப் படம்போட்டு—பொது ஜனங்களுக்கு எல்லாம் நன்றாகத் தெரியும்படியாக வைக்கிறார்கள்.

SRI A. VEDARATHNAM : போலி மருந்துகள் விளம்பரம் செய்யப்படுவதையாவது தடுக்க அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : போலி மருந்து என்று யாரும் விளம்பரம் பண்ணுவதில்லை. (சிரிப்பு.) அப்படிப் பண்ணினால் சுலபத்தில் கண்டு பிடித்துவிடலாம். ஆனால் நல்ல

முறையில் அது இது என்று ரொம்ப நாசூக்காக நல்ல மருந்துகளைப்போலவே விளம்பரம் செய்வதனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

**Sri N. Mahalingam**: விநோதமான பல குணங்கள் எல்லாம் இருப்பதாக சில மருந்துகளின் விளம்பரம் வருகின்றன. அந்த மருந்துகளையாவது ஆஸ்பத்திரிகளில் பரிசீலனை செய்து அப்படிப்பட்ட குணங்கள் இருக்கின்றனவா என்று பார்த்து, இல்லாவிட்டால் தகுந்த நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri M. A. Manickavelu**: கனம் அங்கத்தினர் சொல்வது சர்வரோக நிவாரணியைப் பற்றி. இது போலி மருந்துகள் பற்றிய கேள்வி.

**Sri P. G. Manickam**: கனம் அமைச்சர் அவர்கள் மூன்று பேர்கள் மீது நடவடிக்கை எடுத்திருப்பதாகத் தெரிவித்தார்கள். அந்த மூன்று பேர்கள் யார் யார் ? என்ன என்ன போலி மருந்துகள் அவர்களால் விற்கப்பட்டன ?

**The Hon. Sri M. A. Manickavelu**: The following are the cases which have been so far detected and action taken :—

Spurious Gripe Water—Manufacturer convicted.

Spurious Anacin and Spurious Waterbury's Compound.

அவர்களுடைய பெயர் இங்கே இல்லை. இந்தப் போலி மருந்துகளை விற்றதற்காக 200 ரூபாய், 300 ரூபாய், 250 ரூபாய் என்று தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

**Sri A. A. Rasheed**: Sir, is there any proposal to enhance punishment in the case of manufacturers dealing with spurious drugs?

**The Hon. Sri M. A. Manickavelu**: Awarding punishments depend upon the Magistrates and it is left to their entire discretion. If it is a first offence, the severity will be less and if it is a second offence there will be an enhanced punishment.

**Sri S. Ramalinga Padayachi**: இந்த மருந்துகளில் எல்லாம் ஆங்கிலச் சொற்களேதான் எழுதியிருக்கின்றன. அவற்றை எல்லாம் தமிழில் எழுதுவதற்கு ஏற்பாடு செய்தால் ஜனங்கள் அவற்றை நன்றாகப் புரிந்துகொண்டு வாங்குவார்கள். ஆகவே அவற்றைத் தமிழில் எழுதுவதற்கு ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri M. A. Manickavelu**: அந்த அந்த மருந்துகளை விற்கிறவர்களே தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் என்று எல்லா மொழிகளிலும் எழுதி வைத்துக்கொண்டுதான் விற்கிறார்கள்.

[23rd August 1960

**SRI N. MAHALINGAM:** தவறான போலி மருந்துகளை விற்பவர்களுக்கு கொடுக்கப்படுகிற தண்டனை மிகவும் குறைவாக இருக்கிறது. பாலில் தண்ணீர் கலப்பவர்களுக்கே ஆயிரக்கணக்கான ரூபாய் அபராதமும், ஜெயில் தண்டனையும் இருக்கிறபோது—போலி மருந்துகளை விற்பவர்களுக்கும் அதிகமான—கடுமையான தண்டனை அளிக்க அரசாங்கம் முன்வருமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** பாலில் தண்ணீர் கலப்பவர்களுக்கும் ஆரம்பத்தில் ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்றுதான் அபராதம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அதுபோலவே இதுவும் வளரும்.

*Trade Unions*

* 405 *Q.*—**SRI P. G. MANICKAM:** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ஒரு தொழில் நடத்தும் ஸ்தாபனத்திலே ஒரு தொழிலாளர் சங்கத்துக்கு மாத்திரம் ரெஜிஸ்ட்ரேஷன் செய்துகொள்ள அனுமதி கொடுப்பது பற்றி சர்க்காரால் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா?

(ஆ) அப்படியானால் விவரங்கள் யாவை?

**THE HON. SRI R. VENKATARAMAN:** *Clauses (a) and (b).*—The question of placing restrictions on the number of unions to be registered in an industry or undertaking was considered at the 17th Indian Labour Conference held at Madras during July 1959. The consensus of opinion was not in favour of placing any statutory restrictions on the number of unions that might be registered. This Government have accepted the above views of the Conference.

**SRI P. G. MANICKAM:** தொழிற்சங்கங்களிலே தொழிலாளர்களே நிர்வாகஸ்தர்களாக இருக்கவேண்டும் என்றும், தனிப்பட்டவர்கள் நிர்வாகஸ்தர்களாக இருக்கக்கூடாது என்றும் சட்டம் இயற்றுவதுபற்றி யூனியன் சர்க்கார் நம் சர்க்காருக்கு ஏதாவது தாக்கீது அனுப்பியிருக்கிறதா? அப்படியிருந்தால் அதன் விவரம் யாது?

**THE HON. SRI R. VENKATARAMAN:** மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருக்கு அதைப்பற்றி எதுவும் எழுதவில்லை.

*Water-supply to the City of Madras*

* 406 *Q.*—**SRI S. M. ANNAMALAI:** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

சென்னை நகரில் ஒரு ஆளுக்கு போதிய அளவு தண்ணீர் கிடைக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?